# பகவத் பாதை

BAGAVATH PATHAI

தமிழ் மாத இதழ்

மலர் 5 | இதழ் 6 | ஆகஸ்ட் 10, 2018 | வருடச்சந்தா ரூ 100/- Volume : 5 | Issue 6 | August 10th, 2018 | Annual Subscription Rs. 100/-

# தன்னை அறியும் ஞான முகாம்

**தேடுதல் மிகுந்தவர்களுக்கும், மனவேதனை உள்ளவர்களுக்கும் எளிதான ஞானத்தீர்வு.**

## தியானத்தை விடு! ஞானத்தைப் பெறு!!

விநாடி நேரத்தில் ஞானம் அடைவதற்கான சூட்சுமத்தை சொல்லித் தருகிறார் ஸ்ரீ பகவத் ஐயா அவர்கள்.



## கர்ம வினைகளிலிருந்து விடுபடுவது எவ்வாறு?

அறிவியல் பூர்வமான தீர்வு வழங்குகிறார் ஸ்ரீ பகவத் ஐயா அவர்கள்.

உலக நலம்



Prof. Er.A.C. காமராஜ்
Chairman, NAWAD Tech.,

உடல் நலம்



அக்கு ஹீலர்.
அ.உமர் பாரூக்




இடம் : **காமராஜர் அரங்கம்,**
தேனாம்பேட்டை, சென்னை.
நாள் : **செப்டம்பர் 2, 2018 ஞாயிறு**
நேரம் : **காலை 9.00 - மாலை 5.30**

அறிமுகம் / பகிர்தல்



Shri. G.S. மணி ஐயர்
Carnatic and Hindustani Musician

உடல் நலம்



ஹீலர் பாஸ்கர்

*"ஞானியரை வணங்குவது சிறப்பல்ல. நீங்களே ஞானியாய் மலர்வதுதான் சிறப்பு"*
*– ஸ்ரீ பகவத்*

முன்பதிவுக்கு

ஸ்ரீ பகவத் மிஷன்

சென்னை மையம் :
24/35, கிருபா சங்கரி தெரு, மேற்கு மாம்பலம், ரெங்கராஜபுரம்,
5 விளக்கு அருகில், சாரதா பீடம் கோயில் அருகில், சென்னை - 600 033.
Cell : 94444 02986, 9381019473, 9940534355, 9551253636, 9940502239

தலைமையகம் :
31, இராமலிங்கசாமி தெரு,
அம்மாப்பேட்டை, சேலம்-636 003.
Cell : 99942 05880, 94432 90559, 97891 65555

ONLINE BOOKING

QR code


https://bit.ly/2LgOXSD

Search "Baghavat Bhavan" www.sribagavath.org / www.sribagavathmission.org sribagavathji@gmail.com YouTube Sribagavath / Bagavath Path

| நீதி விரிவடைய வேண்டும்



# பகவத் பாதை தமிழ் மாத இதழ்

பாதிக்கப்படுபவர்களிடம் கருணையுடனும் பாதிப்பை ஏற்படுத்தபவர்களிடம் கடுமையாகவும் நடந்து கொள்வதுதான் நீதி. நீதிமன்றங்களின் செயல்பாட்டுக்குள் அனைத்துப் பிரச்சினைகளும் உட்படுத்தப்பட வேண்டும். போராட்டங்களுக்கு ஆதரவான சட்டங்களை நீக்கிவிட்டு அனைத்து பிரச்சினைகளுக்கும் நீதி கிடைக்கக் கூடிய வகையில் சட்ட நடைமுறைகள் எளிமைப்படுத்தப்பட வேண்டும். நீதியின் எல்லை - நீதி மன்றங்களின் எல்லை சர்வதேச அளவில் விரிவடைய வேண்டும். போராட்டங்களும் யுத்தங்களும் இல்லாது ஒழிய வேண்டும். அனைத்து பிரச்சினைகளும் நீதி தேவனின் கைகளில் ஒப்படைக்கப்பட வேண்டும்.

– ஸ்ரீ பகவத்

## ஞான உறுதி முகாம்

ஸ்ரீ பகவத் மிஷன் குடும்ப உறுப்பினர்களுக்கு வணக்கம்.

**ஞானப்புரிதலை புரிந்துகொள்வது எவ்வளவு முக்கியமோ அதைவிட பலமடங்கு முக்கியமானது புரிந்து கொள்ள வேண்டியவற்றை புரிந்துகொண்டோம் என்று உறுதி செய்துகொள்வது.**

ஐயா வழங்கும் ஞானப் புரிதல் நமக்குள் வெறும் கருத்தாக மட்டும் பதிவதால் பயன் ஏதும் இல்லை. அந்தப் புரிதல் நம்மால் கண்டுபிடிக்கப்பட்ட உண்மையாக மாற வேண்டும். அப்போதுதான் அது நமக்கு விடுதலையைக் கொடுக்கும்.

இதற்காக சிறப்பு ஞான உறுதி முகாம் (Enligletement Confirmation Camp) நடைபெற உள்ளது.

இடம் : **ஸ்ரீ பகவத் பவன்,** ஜருகு மலை அடிவாரம், கொடம்பக்காடு, பெரியகவுண்டாபுரம், சேலம்-636 106.

நாள் : **12.10.2018 மாலை 6.00 மணிமுதல் 14.10.2018 மதியம் 3.00 மணிவரை**

செலவுப் பகிர்வு **ரூ. 3000/-** நபர் ஒருவருக்கு

**இந்த சிறப்பு ஞான உறுதி முகாமில் கலந்து கொள்வதற்கான தகுதிகள் :**

1. ஸ்ரீ பகவத் ஐயாவின் ஞான முகாம்களில் குறைந்தபட்சம் 2ல் கலந்திருக்க வேண்டும்.
2. **ஞான வாழ்வின் நடைமுறை யதார்த்தங்கள்** என்ற நூலினை படித்திருக்க வேண்டும்.

**மேற்கண்ட நிபந்தனைக்கான காரணம் :**

முதல் முறையாக ஞானமுகாமில் பங்குபெறுவர்களிடமும் பகிர்ந்துகொள்ள முடியாத பல விசயங்களையும் நடைமுறை யதார்த்த உண்மைகளையும் இந்த சிறப்பு ஞான முகாமில் பகிர்ந்து கொள்ளப் போகிறோம். இவை மேற்குறிப்பிட்ட தகுதியானவர்களுக்கு ஞானத்தை உறுதி படுத்துவதற்கும், தேடுதலை நிறைவு செய்து விடுதலை பெறுவதற்கும் பேருதவியாக இருக்கும். ஆனால் புதிய அன்பர்களுக்கு குழப்பத்தை ஏற்படுத்திவிடும் என்பதால் தவிர்க்கிறோம். அதனால் இந்நிகழ்ச்சியை **Youtube** லும் வெளியிட மாட்டோம் என்பதை தெரிவித்துக்கொள்கிறோம்.

30 அன்பர்கள் மட்டுமே கலந்துகொள்ள முடியும். முன்பதிவு அவசியம்.

**முன்பதிவு செய்யும் வழிகள்**

**M.O, D.D. (or) Cheque :**

வரைவோலை அனுப்புபவர்கள் A/c Sri Bagavath Mission என்ற பெயரில் சேலத்தில் செல்லத்தக்கதாக அனுப்புமாறு கேட்டுக்கொள்கிறோம்.

**Direct Payment :**

நேரடியாக வங்கியில் செலுத்துபவர்கள் கீழ்க்கண்ட வங்கிக் கணக்கில் செலுத்தலாம்.

**HDFC Bank Sri Bagavath Mission A/c No. 15907620000075, NEFT IFSC : HDFC 0001590 Car Street Branch, Salem**

**ஸ்ரீ பகவத் மிஷன்**

31, இராமலிங்கசாமி தெரு, அம்மாப்பேட்டை, சேலம்-3.
கைப்பேசி : 9994205880, 97891 65555

## உள்ளே



கூடுதல் தகவல்களைப் பெற விரும்புகிறீர்களா? (அ) பாதையை நண்பர்களுக்கு அனுப்ப விரும்புகிறீர்களா?




Sri Bagavath Mission

31, Ramalingasamy Street, Ammapet,
Salem - 636 003. Tamilnadu India
V.A.P. SHARAVANAN - 99942 05880
Dr. N. KAILASAM - 94432 90559
K.S. JEEVAMANI - 97891 65555
www.sribagavathmission.org
www.sribagavath.org
E-mail : sribagavathmission@gmail.com

This book Designed by
SRI ESPARI GRAPHICS, Salem-3.
Cell : 90926 46260, 98651 34075



# நீதி விரிவடைய வேண்டும்



- ஸ்ரீ பகவத்

ஒரு முறை திருச்செந்தூர் மகளிர் கல்லூரியில் சொற்பொழிவு ஒன்றை ஆற்றினேன். அது நான் திருச்செந்தூரில் வழக்கறிஞராக வேலை பார்த்த சமயத்தில் நடந்தது.

சொற்பொழிவின் தலைப்பு என்னவென்று எனக்கு நினைவில்லை.

சொற்பொழிவின் இறுதியில் மாணவி ஒருவர் கேள்வியொன்றை எழுப்பினார்.

"ஒரு கொலை வழக்கில் ஒருவனைக் கொலையாளி எனக் குற்றம் சுமத்தி நீதிமன்றத்தில் வழக்கு நடைபெறுகிறது. வழக்கை விசாரித்த நீதிபதி அவனைக் குற்றவாளி அல்ல என முடிவு செய்து அவனை விடுதலை செய்து விடுகிறார். அவன் கொலையைச் செய்திருக்கவில்லையென்றால், கொலையைச் செய்தது யார்? அதைக் கண்டு பிடிக்க வேண்டாமா?"

- இது அவருடைய கேள்வி.

அவருக்கு என்ன பதில் கூறுவது?

ஒருவன் கொலை செய்தது ஊருக்கெல்லாம் தெரிந்திருக்கிறது. ஆனால் அவன் கொலை செய்யவில்லையென்று நீதிமன்றம் கூறி விடுகிறது.

ஒரு சராசரி மனிதரின் பார்வையில் அந்த மாணவியின் கேள்வி மிகச் சிறந்த கேள்வி. ஆனால் சட்டவல்லுநர்களின் பார்வையில், அது விவரமற்ற ஒருவரின் கேள்வி.

குற்றவாளியை - கொலையாளியைக் கண்டுபிடிப்பது நீதிபதியின் வேலையல்ல. அது காவல்துறையின் வேலை. காவல்துறைதான் குற்றவாளியைக் கண்டுபிடித்து நீதிமன்றத்தில் நிறுத்துகிறது. அவர் மீதுள்ள குற்றச்சாட்டை நிரூபிப்பதற்காக சாட்சிகளையும், சான்றுகளையும் நீதிமன்றத்தில் ஆஜர் செய்கிறது.

அந்த சாட்சியங்களையும், சான்றுகளையும் கவனமுடன் ஆய்வு செய்த நீதிபதி, அவை நம்பக் கூடியவையாக இருந்தால், குற்றம் சுமத்தப்பட்டவரை குற்றவாளியென முடிவு செய்கிறார்.

சாட்சியங்கள் தாறுமாறாகவும், முரண்பட்டும் இருந்தால், அதனை ஆதாரமாகக் கொண்டு ஒருவரைத் தூக்கில் போடுவது நியாயமாகுமா?

ஆகவே "இந்த சாட்சியங்களை ஆதாரமாகக் கொண்டு என்னால் ஒரு தெளிவான முடிவுக்கு வர முடியவில்லை. அதன் பலனாக, குற்றம் சுமத்தப்பட்டவரை இந்த வழக்கிலிருந்து விடுதலை செய்கிறேன்," என்று தீர்ப்பு வழங்கி குற்றவாளியை விடுதலை செய்து விடுகிறார்.

"அவர் கொலை செய்யவில்லையென்றால், கொலை செய்தது யார்?" என நீதிபதியிடம் கேட்டால் அவர் என்ன சொல்லுவார்?

"அதைக் கண்டுபிடிப்பது எனது வேலையல்ல" என முடித்து விடுவார்.

அவருடைய எல்லை அது தான். அதற்குட்பட்டு தான் அவரால் செயல்பட முடியும்.

இது போல் ஏதோ ஒரு வகையில் பாதிக்கப்பட்ட சிலர் ஆர்ப்பாட்டம் மற்றும் வேலை நிறுத்தம் போன்ற போராட்டத்தை அறிவித்திருந்தனர்.

"அவர்கள் அவ்வாறு வேலை நிறுத்தத்தில் ஈடுபடக் கூடாது" எனக் கோரி, இன்னும் ஒருவர் உயர் நீதிமன்றத்தில் மனு தாக்கல் செய்திருந்தார். பத்திரிக்கையில் படித்த செய்தி தான். முழு விபரம் நினைவில் இல்லை.

அந்த மனுவை விசாரித்த நீதிபதி, "தங்கள் கோரிக்கையை வலியுறுத்திப் போராடும் உரிமை, போராடுபவர்களுக்கு இருக்கிறது. அதனால் அவர்களுடைய போராட்டத்தைத் தடை செய்ய முடியாது," எனக் கூறி அந்த மனுவைத் தள்ளுபடி செய்கிறார்.

"தொழில் தகறாறு" என ஒரு சட்டம் உள்ளது. அதில் தொழிலாளர்கள் எவ்வாறு போராடலாம், எவ்வாறு போராடக் கூடாது என்று போராட்டம் - வேலை நிறுத்தம் ஆகியவற்றுக்கு விதி முறைகள் வகுக்கப்பட்டுள்ளன.

போராட்டங்கள் தேவையா?

போராட்டங்கள் சட்டபூர்வமானவையா?

சுதந்திரப் போராட்டத்தினால் தான் இந்தியாவுக்குச் சுதந்திரமே கிடைத்தது.

பிரெஞ்சுப் புரட்சி, ரஷ்யப் புரட்சி என போராட்டங்களுக்கு அங்கீகாரம் கொடுத்துப் போற்றுகிறோம்.

இவை சரி தானா?

நகராட்சி நிர்வாகம் ஒன்று மரம் நடுவதற்கான வேலையைச் சில காண்ட்ராக்டர்களிடம் ஒப்படைத்திருந்தது.

அதன்படி மரம் நட மூன்றடி ஆழக் குழிகளைத் தோண்டும் வேலையை ஒருவர் காண்ட்ராக்ட் எடுத்திருந்தார். அந்தக் குழிகளில் மரம் நடும் வேலையை இன்னுமொருவர் காண்ட்ராக்ட் எடுத்திருந்தார். குழியை மூடி பாத்தி கட்டும் வேலையை மற்றும் ஒருவர் காண்ட்ராக்ட் எடுத்திருந்தார்.

முதல் நாள் குழியைத் தோண்டுவதென்றும், இரண்டாம் நாள் மரங்களை நடுவதென்றும், மூன்றாம் நாள் குழியை மூடி பாத்தி கட்டுவதென்றும் ஒப்பந்தம்

செய்யப்பட்டது.

அதன்படி முதல் நாள் மொத்தக் குழிகளும் தோண்டி முடிக்கப்பட்டன.

இரண்டாம் நாள் மரங்களை நட வேண்டும். ஏதோ ஒரு காரணத்தால் அதற்கு ஒப்பந்தம் செய்தவர் மரங்களை நடாமல் போய் விட்டார்.

மூன்றாம் நாள் குழியை நிரப்பி பாத்தி கட்ட வேண்டும். அதற்கு ஒப்பந்தம் செய்தவர் அந்த ஒப்பந்தப்படி அவருடைய வேலையை முடித்து விட்டார்.

மூன்றாவது நபர் விதிப்படி செயல்படவில்லையா?

இப்படி தான் டூ வீலரில் ஹெல்மெட் அணிவதும், நான்கு சக்கர வாகனங்களில் சீட் பெல்ட் அணிவதும் நிர்ப்பந்திக்கப்படுகிறது.

இவற்றை எதிர்த்தும் போராட்டங்கள் நடைபெறுகின்றன.

உயிரைக் காக்கும் இந்த விதி முறைகள் அவசியமற்றவையா?

பலர் சேர்ந்து போராடுவது முட்டாள்தனமானதா?

ஒரு வைரமாலை தன்னுடையது என்று கூறி இருவர் அரசரிடம் புகார் கொடுத்தார்கள்.

அவர்கள் ஒவ்வொருவரும் அந்த மாலை தங்களுடையதுதான் என பலச் சான்றுகளைக் கூறினர்.

இருவர் கூற்றுகளும் நம்பும்படியாகவே இருந்தன.

அரசர் அவர்களிடம், "நீங்கள் இருவரும் ஒருவரை ஒருவர் கைகளால் தாக்கி யுத்தம் செய்ய வேண்டும். யார் ஜெயிக்கிறார்கள் என்று பார்த்து நான் தீர்ப்பு கூறுகிறேன்" என்று கூறினார்.

நகைக்காக அந்த இருவரும் ஒருவரை ஒருவர் அடித்துக் கொண்டார்கள்.

மந்திரி ஒருவர் மட்டும் அரசரிடம் ரகசியமாகக் கேட்டார்.

"உங்களுடைய விசாரணை முறை வினோதமாக இருக்கிறதே. தீர்ப்பு வழங்க வேண்டிய நீங்களே, சண்டை போட்டு உரிமையை நிலைநாட்டிக் கொள்ளுங்கள் என்று, இப்படிக் கூறலாமா?"

அரசரும் அவரிடம் ரகசியமாகக் கூறினார், "நான் விசாரணை நடத்தவில்லை. தீர்ப்பு வழங்கி தண்டனைதான் கொடுத்துக் கொண்டிருக்கிறேன். அந்த நகை தங்களுக்குப் பாத்தியப்பட்டதென இருவருமே பொய்யாக உரிமை கொண்டாடிக் கொண்டிருக்கிறார்கள். அதற்குத் தண்டனையாகதான் அடுத்தவரிடம் அடி வாங்கிக் கொண்டிருக்கிறார்கள்...

"உண்மையில் அந்த நகை எனக்குச் சொந்தமானது. நேற்று நான் நகர சோதனைக்காகச் செல்லும் போது தவற விட்டு விட்டேன்."

இப்படியும் நமது போராட்டங்கள் ஊக்குவிக்கப்படுகின்றனவா?

போராட்டம் எதற்கு?

நீதி கேட்டு தான் போராடுகிறார்கள். நீதி கிடைத்தால் போராட மாட்டார்கள்.

நீதியை வழங்க வேண்டியது யார்?

அரசாங்கமா? பலசாலிகளா?

நீதிமன்றங்கள்தான் நீதி வழங்க வேண்டும். நமது சட்ட விதி முறைகள்தான் நீதி வழங்க வேண்டும்.

"உங்கள் பிரச்சினைகளை நீங்களே போராடித் தீர்த்துக் கொள்ளுங்கள்" என்று கூறுவது சரியானதாக இருக்க முடியுமா?

போராட்டங்கள் அனைத்தும் அறியாமையின் விளைவே. போராட்டங்களுக்கு ஆதரவு கொடுப்பது என்பதும் அறியாமையை ஊக்குவிப்பதேயாகும்.

ஆதிகாலத்து நடைமுறை வேறு. நவீனகாலத்து நடைமுறை வேறு.

கம்ப்யூட்டரை உருவாக்கும் காலத்தில் அது நமது அலுவலக அறையின் அளவுக்குப் பெரிதாக இருந்தது. இப்போது அது நமது சட்டைப்பையில் வைத்துக் கொள்ளும் அளவுக்குச் சிறியதாகி விட்டது.

அனைத்து நாடுகளும் அங்கீகரிக்கப்பட்டு விட்டன. அதனால் எந்த நாடும் தங்களுடைய அங்கீகாரத்துக்காகப் போராடத் தேவையில்லை. ஒரு நாட்டோடு இன்னொரு நாடு போர் புரியத் தேவையில்லை.

ஆனால், இன்றளவும் நாடுகளிடையே போர்கள் நடந்து கொண்டுதான் இருக்கின்றன.

இதற்கு என்ன காரணம்?

இப்போது எவருடைய ஆட்சி நடந்து வருகிறது? நீதிமன்றங்களின் ஆட்சி நடந்து வருகிறதா? அல்லது அரசியல்வாதிகளின் ஆட்சி நடந்து வருகிறதா?

நீதிமன்றங்களின் ஆட்சிதான் நடந்து வருகிறது என்று உறுதியாகக் கூற முடியவில்லை.

நீதிமன்றங்களின் எல்லையும் பொறுப்புகளும் அதிகப்படுத்தப்படுவதன் மூலமே சமுதாயத்தில் நீதியை நிலை நாட்ட முடியும்.

கொலைக் குற்றவாளியின் மீது சுமத்தப்பட்டக் குற்றச்சாட்டு, சந்தேகத்துக்கு இடமளிக்காத வகையில் நிரூபிக்கப்படவில்லை என்று கூறி அவனை விட்டு விடலாம். ஆனால் குற்றம் செய்பவனைக் கட்டுப்படுத்தாத வரையில் நீதியை எப்படி நிலை நாட்ட முடியும்?

நிம்மதியான - ஆரோக்கியமான சமுதாயத்தை எவ்வாறு உருவாக்க முடியும்?

பாதிக்கப்பட்டுப் போராடுபவர்களை நீதிக்கு உட்படுத்தும் பட்சத்தில் அவர்கள் ஏன் போராடப் போகிறார்கள்?

அவர்களுடைய கோரிக்கைகளைப் பரிசீலனைக்கு எடுத்துக் கொள்ளும் பட்சத்தில் அவர்கள் ஏன் போராடப் போகிறார்கள்?

நீதிக்காகப் போராடுபவர்களுக்கு நீதி வழங்க வேண்டுமா?

நீதி என்பது என்ன?

பாதிக்கப்படுபவர்களிடம் கருணையுடனும், பாதிப்பை ஏற்படுத்துபவர்களிடம் கடுமையாகவும் நடந்து கொள்வது தான்நீதி.

ஹெல்மெட் வேண்டாமென்று போராடுபவர்களிடம் என்ன நியாயம் இருக்கிறது?

கருணையுடன் பரிசீலனை செய்தால், அவர்கள் பக்கத்து நியாயமும் தெரிய வரும்.

வாகனப் போக்குவரத்து மிகுந்த நகரங்களில் பயணித்து நகர்ந்து செல்வதே சிரமமான ஒன்றாகும். இப்படிச் சிரமத்துடன் நகர்ந்து செல்லும் இடங்களிலெல்லாம் ஹெல்மெட் தேவையா?

போக்குவரத்து மிகுந்த இடங்களில் வேகத்தைக் கட்டுப்படுத்துவது ஒன்றே தேவையானது. அந்த

இடங்களில் அதிவேகப் பயணந்தான் விபத்துகளை ஏற்படுத்துகின்றது. அதைக் கட்டுப்படுத்துவது மட்டுமே நீதியாக அமையும்.

நெடு வழிச் சாலைகளில் வாகனங்கள் அனைத்தும் சீறிப் பாய்ந்து தான் செல்லும். அங்கு ஹெல்மெட் அணிவதும், சீட் பெல்ட் மாட்டிக் கொள்வதும் அவசியமானதே.

தற்போது சென்னையிலிருந்து சேலத்துக்கு எட்டு வழி பசுமைச்சாலை அமைக்க அரசு முயன்று வருகிறது. இதற்குத் தனியாருடைய நிலங்களும் வீடுகளும் ஆர்ஜிதம் செய்யப்பட்டு வருகின்றன. நில உரிமையாளர்கள் தங்கள் நிலங்களை விட்டுக் கொடுக்க மறுத்துப் போராடி வருகின்றனர்.

எந்தெந்த வழிகளில் எல்லாம் நாட்டை முன்னேற்ற வேண்டுமோ அந்தந்த வழிகளிலெல்லாம் புதிய திட்டங்களை வகுத்து நாட்டை முன்னேற்றுவது தான் அரசின் கடமை. அதற்கு ஆதரவு வழங்க வேண்டுவது குடிமக்களின் கடமை.

ஆனால் தங்கள் நிலங்களையும், வீடுகளையும் இழந்து பாதிக்கப்படுபவர்களின் நிலையைக் கருணையுடன் பரிசீலிக்க வேண்டாமா?

புதிய பெரிய சாலை என்பது வெறும் சமுதாயச் சாலையல்ல. அது கோடி கோடியாக வருவாயையும், வேலை வாய்ப்புகளையும் கொண்டு வரும் வர்த்தகச் சாலை.

அந்த வருவாயில் பங்கு பெறுபவர்களாகவும், வேலை வாய்ப்புகளில் பங்கு பெறுபவர்களாகவும், பாதிக்கப்பட்ட அவர்களை இணைத்துக் கொள்வது தானே அவர்களை நிறைவடையச் செய்வதாகும்?

இரு தரப்பினரையும் அரவணைத்துக் கொள்ளும் வகையில் நீதிமன்றங்களின் அதிகாரங்கள் உயர்த்தப்பட வேண்டும்.

நீதிமன்றங்களின் செயல்பாட்டுக்குள் அனைத்துப் பிரச்சினைகளும் உட்படுத்தப்பட வேண்டும்.

போராட்டங்களுக்கு ஆதரவான சட்டங்களை நீக்கி விட்டு அனைத்து பிரச்சினைகளுக்கும் நீதி கிடைக்கக் கூடிய வகையில் சட்ட நடைமுறைகள் எளிமைப்படுத்தப்பட வேண்டும்.

நீதியின்-தர்மத்தின் ஆட்சியில் அனைவரும் நிம்மதிப் பெருமூச்சு விட வேண்டும்.

நீதியின் எல்லை - நீதிமன்றங்களின் எல்லை சர்வதேச அளவில் விரிவடைய வேண்டும்.

போராட்டங்களும் யுத்தங்களும் இல்லாது ஒழிய வேண்டும். அனைத்துப் பிரச்சினைகளும் நீதிதேவனின் கைகளில் ஒப்படைக்கப்பட வேண்டும்.



**வேண்டுகோள் :** ஐயா வழங்கிய ஞானம் நமது அக உலகத்துக்குப் போதும். ஆனால் புறவுலகம் இன்னும் அவலத்தில் தான் இருக்கிறது. அதைச் சரிசெய்ய நாம் என்ன செய்ய வேண்டும்?

நமது புறப்பிரச்சனைகளை மறுபரிசீலனை செய்தால் மட்டும் போதும். அது சம்பந்தமான விழிப்புணர்வு ஏற்பட்டால் மட்டும் போதும்.

அதற்காக ஐயா எழுதியதுதான் **ஸ்ரீ பகவத் பாதை** என்னும் நூல். இந்நூல் உலக நலனில் அக்கறை கொண்டவர்கள் அனைவரையும் சென்றடைய வேண்டும். இந்நூலை அனைவருக்கும் கொண்டு சேர்ப்பதை கடமையாகக் கொண்டு செயல்பட வேண்டுகிறோம்.

# ஸ்ரீ பகவத் பவன் நிறுவனர்கள், புரவலர்கள்

அன்பு உள்ளங்களுக்கு ஓர் அன்பான வேண்டுகோள்.

ஸ்ரீ பகவத் மிஷன் என்பது பணப்புழக்கம் மிகுந்த ஒரு கார்ப்பரேட் நிறுவனம் அல்ல. கட்டணம் வாங்கிக் கொள்ளும் கல்வி நிறுவனமும் அல்ல. ஐயா அவர்களுக்கு தங்கியிருக்க வீடு ஒன்று தேவைப்பட்டது. நம் அனைவரது ஒத்துழைப்பாலும் **ஸ்ரீ பகவத் பவன்** உருவானது. தற்போது அந்த இல்லம் ஐயாவின் இருப்பிடமாகவும், கற்றிட வருவோரின் குருகுலமாகவும் நம் அனைவரது பண்ணை வீடாகவும் செயல்பட்டு வருகிறது. ஸ்ரீ பகவத் பவனின் நித்திய நிர்வாகச் செலவினங்களுக்கான நித்திய நிதி ஒன்றும் தேவைப்படுகிறது.

'நிரந்தர வைப்பு நிதி எதனையும் தற்போது உருவாக்க வேண்டாம்' என்று ஐயா கூறிவிட்டதால் நிரந்தரப் புரவலர் குழு ஒன்றை உருவாக்க முடிவு செய்துள்ளோம். முதற்கட்டமாக 100 ஆர்வலர்கள் கொண்ட புரவலர் குழு ஒன்று மே மாதம் முதல் தொடங்கப்பட்டுள்ளது. அதன்படி ரூ. 1000/- முதல் ஏதாவது ஒரு தொகையை மாதந்தோறும் அல்லது ரூ. 12,000/- முதல் ஏதாவது ஒரு தொகையை வருடந்தோறும் வழங்கும் ஆர்வம் உள்ளவர்கள் ஸ்ரீ பகவத் பவனின் புரவலர்களாக இணைத்துக் கொள்ளலாம். **அதற்காக ஏற்றுக்கொண்ட முழுத்தொகையையும் மாதந்தோறும் வழங்கியே ஆகவேண்டும் என்ற நிபந்தனை எதுவும் புரவலர்களுக்குக் கிடையாது.**

நமது வேண்டுகோளை ஏற்று இம்மாதத்தில் புரவலராக இணைந்தவர்கள் திரு. **B. ஸ்ரீனிவாசன்,** சென்னை. திருமதி **சரசு,** சென்னை, திரு. **M. சுகுமார்,** கோவில்பட்டி, **Dr. மகேஷ்வரி,** டெல்லி, நிறுவனர்களாக இணைந்து கொண்டவர்கள் திரு. **E. மணிகண்டன்,** திண்டுக்கல், திரு. **G. கோபிநாத்,** திருப்பூர் நிறுவனர்களாகவும் புரவலர்களாகவும் தங்களை இணைத்துக் கொண்ட அனைவருக்கும் ஸ்ரீபகவத் மிஷன் சார்பில் உளமார்ந்த நன்றியையும் பாராட்டுகளையும் தெரிவித்துக் கொள்கிறோம். வாய்ப்புள்ளவர்கள் நிறுவனர்களாகவும் புரவலர்களாகவும் இணைந்து உதவிட வேண்டுகிறோம்.

வங்கிக் கணக்கில் நேரடியாக செலுத்துபவர்கள் **HDFC Bank Sri Bagavath Mission A/c No. 15907620000075, NEFT IFSC : HDFC 0001590 Car Street Branch, Salem** என்ற கணக்கில் செலுத்தலாம். **Bank A/c-** ல் நேரடியாக செலுத்தியவர்கள் தகவலை **97891 65555** என்ற எண்ணிற்கு தெரிவிக்க வேண்டுகிறோம்.

V.A.P. **சரவணன்,** சேலம்.
செல் : 99942 05880



# ? கேள்வி? பதில்...

படிப்பில் கவனம் செலுத்த என்ன செய்ய வேண்டும்?

**கேள்வி :** நான் பத்தாம் வகுப்பு படிக்கும் பள்ளி மாணவன். நான் எவ்வளவுதான் முயன்று கவனத்துடன் படித்தாலும் மதிப்பெண் கிடைப்பதில்லை. தேர்வில் கேள்விகளுக்கான விடை தெரிந்தும் கவனக்குறைவால் ஏதோ தவறு செய்து விடுகிறேன். அதனால் மதிப்பெண் பெற முடியாமல் போய்விடுகிறது. என் படிப்பில் கவனம் அதிகரித்து நல்ல மதிப்பெண் பெற நான் என்ன செய்ய வேண்டும்? ஆலோசனை வழங்குங்கள்.

**பதில் :** இது மாணவர்களுக்கான பொதுவான பிரச்சனை. நமது ஸ்ரீ பகவத் ஐயா கொடுக்கும் மனதைப் பற்றிய புரிதலால் மாற்றமடைந்த ஒரு டியூஷன் ஆசிரியை மாணவர்களிடம் நடத்திய ஆய்வும் அதற்கான தீர்வும் அனைவருக்கும் பயன்படும் என நினைத்து அதை இங்கே பகிர்கிறேன். இனி அந்த ஆசிரியை...

"நான் திருமணம் ஆன ஒரு பெண். எனக்கு சிறுவயதிலேயே இருந்துவந்த தீராத மன பிரச்சனை பகவத் ஐயா வழங்கும் புரிதலினால் தீர்ந்தது. நான் பல பள்ளி குழந்தைகளுக்கு டியூஷன் எடுப்பேன். முக்கியமாக சரியாகப் படிக்காதவர்கள், கணக்கு பாடத்தில் ரொம்ப கஷ்டப்படும் குழந்தைகள் என பலரையும், அவர்களது குறைகளை, அவர்களையே கண்டுபிடிக்க வைத்து, நான்றாக புரிந்து கொண்டு படிக்கும் படி மாற்றி விடுவேன்...

“பகவத் அய்யாவின் புரிதலுக்கு பிறகு பிள்ளைகளுக்கு சொல்லிக் கொடுப்பதில் புதிய புதிய அணுகுமுறைகளைக் கையாண்டும், அவர்களது பொதுவான பிரச்சனைகளை ஆராய்ந்தும் அதற்கான தீர்வை தேடிக்கொண்டே இருப்பேன்...

“பொதுவாக குழந்தைகள் கவனமின்மை, பொறுப்பின்மை என்ற இரண்டு விஷயங்களில்தான் பெரும்பாலும் தவறு செய்து விடுகிறார்கள். பரிட்சை எழுதி முடித்த பிறகு விடைத்தாளில் எழுதியதை சரிபார்க்க சொல்லுவோம். ஆனால் அதற்கு மாணவர்கள் முக்கியத்துவம் கொடுப்பதில்லை. மதிப்பெண் எடுப்பதில் ஆர்வமுள்ள மாணவர்கள் மட்டும் பரீட்சை எழுதி முடித்த பின்பு விடைத்தாளில் எழுதியதை சரிபார்ப்பதில் கவனமாக இருக்கிறார்கள். மற்றபடி பெரும்பாலான மாணவர்கள் இதில் கவனம் இல்லாமல் இருக்கிறார்கள். சொல்லிக்கொடுக்கும் ஆசிரியர்களுக்கு இது ஒரு சவாலாகவே இருந்து வருகிறது. ஒரு கட்டத்தில் இது அந்த மாணவனின் கவனக்குறைவு என்று ஆசிரியர் முடிவு செய்து விடுகிறார். பெற்றோரும் "நீ பாடத்தில் கவனம் செலுத்தாமல் மற்ற விஷயங்களில் கவனம் செலுத்துகிறாய்" என்று கூறிவிடுகிறார்கள். இதனால் மாணவர்கள் என்ன செய்வது என்றே தெரியாத நிலைக்குப் போய், தான் சரியில்லையோ என்ற முடிவுக்கு வந்து விடுகிறார்கள்...

"இதற்கு ஒரு தீர்வு வேண்டும் என்று எனக்குள் பல நாட்கள் யோசித்தேன். நாம் சரியாக அவர்களுக்கு புரிய வைக்காமல் அவர்களை குறை கூறுவதாக எனக்குள் உணர்ந்தேன். இப்படியே நாட்கள் போய்க் கொண்டிருந்தது. ஒரு நாள் சமையல் செய்து கொண்டிருக்கும் போது திடீரென எனக்கு ஒரு ஐடியா தோன்றியது. அதை பரிசோதனை செய்து பார்க்க வேண்டும் என்று ஆசைப்பட்டேன். எனது ஐடியாவை மற்றவர்களிடம் கூறினால் அதை அவர்கள் ஏற்பார்கள் என்று கூற முடியாது. அதனால் நானே களத்தில் இறங்கி முயற்சி செய்து பார்க்க வேண்டும் என முடிவு செய்தேன்...

"ஒரு பள்ளியின் தலைமை ஆசிரியரை சந்தித்து என்னுடைய ஐடியாவை கூறினேன். "எனது ஆய்வை செயல்படுத்திப் பார்க்க மாணவர்களின் கூட்டம் தேவை. உங்களது பள்ளியில் பத்தாவது படிக்கும் மாணவர்களின் கடைசி நேர ஒரு வகுப்பு மட்டும் நான் பாடம் எடுக்க உதவினால் போதும்" என்று கேட்டுக் கொண்டேன். மேலும் "நான் எதையும் புதிதாக கற்றுக் கொடுக்கப் போவதில்லை. நீங்கள் சொல்லிக் கொடுத்ததைத்தான் நானும் வேறு ஒரு வகையில் சொல்லிக் கொடுக்கப் போகிறேன்" என்றேன். "இந்த ஆய்வு முழுக்க முழுக்க என்னுடைய ஆராய்ச்சிக்காக மட்டுமே" என்றேன்...

"அந்த நல்ல உள்ளம் கொண்ட தலைமை ஆசிரியர் எனக்கு அனுமதி கொடுத்து முயற்சி செய்து பார்க்க சொன்னார். நான் முதலில் அந்த பத்தாவது படிக்கும் குழந்தைகளுக்கு ஒரு வாரம் வகுப்பு எடுத்து பரிட்சை வைத்தேன். அவர்கள் வாங்கிய மதிப்பெண் அடிப்படையில் மூன்று பிரிவாக பிரித்தேன். நன்றாக படிக்கும் மாணவர்களை முதல் பிரிவிலும், சுமாராக படிக்கும் மாணவர்களை இரண்டாவது பிரிவிலும், சரியாகப் படிக்காத மாணவர்களை மூன்றாவது பிரிவிலும் பிரித்துக் கொண்டேன். ஆனால் இந்த பிரிவுகளை அவர்களிடம் தெரிவிக்கவில்லை. என்னுடைய டைரியில் குறித்துக் கொண்டேன்...

"மாணவர்களுக்கு சொல்லிக் கொடுப்பதில் எந்த மாற்றமும் செய்யாமல் அவர்களது விடைத்தாளில் உள்ள கவனக்குறைவினால் ஏற்பட்டுள்ள குறைகளை மட்டும் சுட்டிக் காட்டி "இந்த இடத்தில் நீ கவனமாக இருக்க வேண்டும்" என்று கூறினேன். அடுத்த ஒருவாரம் கழித்து பரீட்சை வைத்தேன், அதே பழைய கவனக்குறைவினால் ஏற்பட்ட தவறுகள் அப்படியே இருந்தன. எந்த ஒரு மாற்றமும் ஏற்படவில்லை...

"அடுத்த முறை மாணவர்கள் பொதுவாக செய்யும் கவனக்குறைவினால் ஏற்படும் தவறுகள் அனைத்தையும் ஒன்று சேர்த்து நானே கேள்வியும் அதற்கான கவனக்குறைவுடன் கூடிய பதில் தொகுப்பையும் சேர்த்து எழுதி அதை ஜெராக்ஸ் பிரதி

எடுத்து எல்லா மாணவர்களுக்கும் கொடுத்தேன். சிகப்பு நிற மை பேனா ஒன்றை எல்லா மாணவர்களுக்கும் கொடுத்தேன். "இந்த கேள்வி - பதிலில் நிறைய தவறுகள் இருக்கின்றன. தவறுகளை மட்டும் சிகப்பு நிறத்தில் திருத்தம் செய்து விட்டு அதற்கு சரியான விடையை, மற்றொரு வெள்ளைத்தாளில் எழுதுங்கள்" என்று சொன்னேன்.

மாணவர்களிடம், "இப்பொழுது நீங்கள் எல்லோரும் மாணவர்கள் கிடையாது. தவறுகளை கண்டுபிடிக்கும் ஆசிரியர்கள் என்ற மனநிலையோடு இந்த விடைத்தாளை திருத்துங்கள்" என்று கேட்டுக்கொண்டேன். எல்லா மாணவர்களும் உற்சாகமாக திருத்தி கொடுத்தார்கள்...

"அடுத்த ஒரு வாரம் கழித்து பரீட்சை வைத்தேன். எனக்கு மிகப்பெரிய ஆச்சரியம் ஏற்பட்டது. ஒவ்வொரு மாணவனின் மதிப்பெண்ணும் 20 அதிகமாகி இருந்தது. முதலாம் பிரிவில் உள்ள மாணவர்கள் பெரும்பாலும் கவனக் குறைவின்றி சரியாக விடை எழுதி இருந்தார்கள். இரண்டாம் பிரிவில் உள்ள மாணவர்கள் 60 மதிப்பெண்ணில் இருந்தது 80 மதிப்பெண்ணுக்கு மாறி இருந்தார்கள். மூன்றாவது பிரிவில் உள்ள மாணவர்கள் 30 மதிப்பெண்ணில் இருந்து 65 மதிப்பெண்ணுக்கு மாறி இருந்தார்கள். இது எனக்கு மிகவும் மகிழ்ச்சியைக் கொடுத்தது...

"இங்கு நடந்து என்ன? அவர்களின் கவனக் குறைவினால் ஏற்படும் தவறுகள் என்ன என்பதை அவர்களே பிரித்து புரிந்து கொள்ளும்படி புரியவைத்தேன். கவனக்குறைவினால் ஏற்படும் தவறுகளை வேறுபடுத்திக்காட்ட சிகப்பு நிற பேனாவை பயன்படுத்தச் சொன்னான். இதனால் மாணவர்கள் தேர்வில் செய்யும் பொதுவான தவறுகளும் அதற்கான சரியான விடையையும் வேறுபடுத்தி பார்க்க கற்றுக் கொடுத்தேன். எது தவறு என்பதை மட்டும் தனியாக பிரித்து வேறுபடுத்தி காட்டினேன்...

"நான் பள்ளியில் படிக்கும்போது எனக்கு எனது கவனக்குறைவினால் ஏற்பட்ட தவறுகள் அவ்வளவாக தெரியவில்லை. ஏனெனில் அதைப்பற்றி நான் பெரிதாக கண்டு கொள்ளவே இல்லை. ஆனால் நான் ஒரு ஆசிரியர் என்ற நிலையில் இருந்து பார்க்கும்போது மாணவர்களின் தவறுகள் மட்டும்தான் எனது கண்களுக்குத் தெரிகின்றன. அதனால் மாணவர்கள் செய்யும் பொதுவான கவனக்குறைவினால் ஏற்படும் தவறுகள் அனைத்தையும் ஒன்றுதொகுத்து நானே கேள்வியும் அதற்கான கவனக்குறைவுடன் கூடிய பதில் தொகுப்பையும் சேர்த்தே ஜெராக்ஸ் பிரதி எடுத்து மாணவர்களுக்கு கொடுத்தேன். தவறுகளை வேறுபடுத்திக் காட்ட சிவப்பு நிற மை பேனா பயன்படுத்திக் கொண்டேன். மாணவர்களை தவறுகளை கண்டுபிடிக்கும் ஆசிரியரின் நிலைக்கு உயர்த்தி விட்டேன். சிவப்பு நிற மை பேனா பயன்படுத்தி தவறுகளைக் கண்டுபிடித்து மதிப்பெண் கொடுக்கும் பணி என்பதால் மாணவர்கள் உற்சாகமாக செயல்பட்டனர்...

"முதலாவது பிரிவில் உள்ள மாணவர்கள் நான் எழுதிய 40 தவறுகளுக்கு சரியான விடையை எழுதி இருந்தார்கள். இரண்டாவது பிரிவில் உள்ள மாணவர்கள் 35 தவறுகளை கண்டுபிடித்தனர். மூன்றவது பிரிவில் உள்ள மாணவர்கள் கூட 30 தவறுகளை கண்டுபிடித்தனர்...

"மாணவர்கள் என்னிடம் "நீங்கள் என்ன இவ்வளவு தவறுகளுடன் பதில் எழுதி இருக்கிறீர்கள்?" என்றார்கள். பிறகு அவர்களிடம் கூறினேன். "நீ ஒரு மாணவனாக இருந்து விடை எழுதும் பொழுது உன்னுடைய கவனக்குறைவு தவறுகள் உங்களுக்கு தெரிவதில்லை. மற்றவர்களின் விடைத்தாள் திருத்தம் செய்யும் பொழுது நீ ஆசிரியர் என்ற நிலைக்கு வந்துவிடுகிறாய். இப்பொழுது உனது கண்களுக்கு அவர்களின் தவறுகள் மட்டும்தான் தெரிகிறது" என்றேன்...

"ஆசிரியர் என்ற மனநிலையில் இருந்து தவறுகளைக் கண்டுபிடித்து அதற்கான சரியான விடையை எழுதி பழக வைத்தேன். உன்னுடைய கவனக்குறைவு தவறுகளை மட்டும் எப்படி கண்டுபிடிப்பது என்பதை உனக்கு கற்றுக்கொடுத்தேன். தவறுகளை சிகப்பு நிற பேனாவில் அடையாளப் படுத்திக் காட்டி சரியான விடையை ஒரு வெள்ளைத்தாளில் எழுதி வைத்தேன். இப்படி பல முறை தவறுகளை வேறுபடுத்திக் காட்டியதால் அடுத்த முறை விடை எழுதும் பொழுது கவனக்குறைவினால் ஏற்படும் தவறுகள் முற்றிலுமாக மறைந்து விடுகின்றன...

- இதுதான் என் ஆய்வில் கிடைத்த தீர்வு" என்றார்.

பொதுவாக மாணவர்களிடம் கவனமின்மை என்பதெல்லாம் இருப்பதில்லை. கவனம் இடம் மாறி இருக்கிறது. படிப்பில் இருக்க வேண்டிய கவனம் தொலைபேசி whatsapp, Facebook தொலைக்காட்சி என்று இடம் மாறி உள்ளது. மேலே கூறியவற்றிற்கு தினமும் ஒரு குறிப்பிட்ட நேரத்தை பயன்படுத்திக் கொள்வதில் தவறில்லை. அடிமையாகாமல் பார்த்துக் கொண்டால் போதும். படிப்பின் முக்கியத்துவத்தை உணர்ந்தால் மட்டும் போதும். அதற்கான ஆர்வமும் தன்னாலே வந்துவிடும்.

கவனத்தைக் குவித்தல் எவ்வளவு முக்கியமோ அதேபோல் கவனத்திலிருந்து விடுபட தெரிந்துகொள்வது மிகவும் முக்கியம். எதன் மீது ஆர்வம் நாம் காட்டுகிறோமோ அதில் கவனம் தானாகவே குவிகிறது. எது முக்கியம் என்று நாம் முடிவு செய்கிறோமோ அப்போது தேவையற்றதிலிருந்துவந்த ஆர்வம் தேவையானவற்றின் மீது குவிகிறது. கவனத்தை தொலைக்காட்சி, பேஸ்புக், வாட்ஸ் அப், செல்போன் என்று செலுத்தும்போதுதான் நாம் அதற்கு அடிமையாகி விடுகிறோம். **படிப்பில் கவனம் என்பது முதன்மையானது. மற்ற விஷயங்கள் அனைத்தும் இரண்டாம் பட்சமானது என்ற முடிவுக்கு நாம் வந்துவிட வேண்டும். நமக்கு எது முக்கியம், எது இரண்டாம் பட்சமானது என்பதை தெரிந்து கொண்டு செயல்படத் தொடங்கினால் போதும் தேவையானவற்றில் ஆர்வம் தன்னாலே ஏற்பட்டுவிடும்.**

# ஆசிரியர் பகுதி

K.S. ஜீவமணி
செல் : 97891 65555



பகவத் பாதையில் பயணிக்கும் அனைவருக்கும் சகப்பயணியின் வணக்கம்.

அடைவதற்கு அரிதாக இருந்த மெய்ஞானத்தை ஆர்வமுள்ள அனைவரும் எளிதாக பெறும் வண்ணம் எளிமையாக்கிவிட்டார் ஸ்ரீ பகவத் ஐயா அவர்கள். அதனை தேடுதல் கொண்ட அனைவருக்கும் எடுத்துச் செல்வதற்காக 2011 ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் தொடங்கப்பட்ட நமது பகவத் பாதையின் பயணம் 8 ஆண்டுகளைக் கடந்து 9ம் ஆண்டை நோக்கி சென்று கொண்டிருக்கிறது. சில நூறு அன்பர்களுடன் தொடங்கப்பட்ட இப்பயணம் தற்போது ஆயிரக்கணக்கானோரை தன்னுடன் இணைத்துக் கொண்டு பயணித்துக் கொண்டிருக்கிறது.

ஐயாவால் பயனடைந்த அனைவரும் ஐயாவின் வாழ்க்கை வரலாற்றை தெரிந்து கொள்வதில் ஆர்வம் காட்டியதால், ஐயா தனது சுயசரிதையை **பகவத் பயணம்** என்ற தலைப்பில் நூல் ஒன்று எழுதி இருந்தார். இந்நூல் சென்னை மேற்கு மாம்பலத்தில் அமைந்துள்ள ஸ்ரீ பகவத் மிஷன் சென்னை மையத்தில் ஜூலை 8-ம் தேதி வெளியிடப்பட்டது.

இதன் முதல் பிரதியை ஸ்ரீ பகவத் ஐயாவின் பேரன் **மாஸ்டர் அபிநவ்** வெளியிட ஸ்ரீ பகவத் அய்யாவின் இளைய சகோதரி **ரோஸ்லின் கருணாகரன்** பெற்றுக் கொண்டார். இதில் அன்பர்கள் பலரும் கலந்து கொண்டு சிறப்பித்தனர். இவ்விழாவில் திரு. **சுகுமார் ஸ்ரீனிவாசன்** – திருமதி **லில்லி** தம்பதியினர் செப்டம்பர் ஞான முகாமின் செலவுகளை எதிர்கொள்வதற்காக ரூபாய் 25000 நன்கொடை வழங்கினார்கள். இவர்களுக்கு உளமாந்த நன்றியை தெரிவித்துக் கொள்கிறோம். இதனைத் தொடர்ந்து ஐயாவின் சத்சங்கமும் நடைபெற்றது.

மேலும் ஜூலை 14 மற்றும் 15ம் தேதிகளில் சேலம் ஸ்ரீ பகவத் பவனில் இரண்டு நாள் ஞான முகாம் சிறப்பாக நடைபெற்றது. இதில் பல புதிய அன்பர்கள் கலந்து கொண்டனர் கலந்து கொண்ட அனைவரும் பயனடைந்தனர்.

ஸ்ரீ பகவத் ஐயா அவர்கள் வழங்கிய ஞானத்தால் பயனடைந்த நாம் அனைவரும் அதனை தேடுதல் கொண்ட அனைவருக்கும் கொண்டு செல்லும் மாபெரும் பணியை செய்து வருகிறோம். இதன் பெரும் முயற்சியாக செப்டம்பர் 2ம் தேதி சென்னை காமராஜர் அரங்கில் ஒரு நாள் சிறப்பு ஞான முகாம் நடைபெற உள்ளது. இது சம்பந்தமான ஒரு கலந்தாய்வுக் கூட்டம் ஜூலை 22ம் தேதி சென்னை மேற்கு மாம்பலத்தில் உள்ள ஸ்ரீ பகவத் மிஷன் மையத்தில் நடைபெற்றது. இதில் சென்னை அன்பர்கள் பலரும் கலந்து கொண்டு தங்களது மேலான ஆலோசனைகளை வழங்கினார்கள். திரு. **சம்பந்தம் ஐயா – திருமதி வடிவு அம்மாள் குடும்பத்தினர்** ஞான முகாமில் வழங்கப்படும் உணவுக்காக ஆகும் அனைத்து செலவுகளையும் ஏற்றுக் கொள்வதாக உறுதியளித்துள்ளார்கள். இவர்களுக்கு நம் அனைவரின் சார்பாக உளமார்ந்த நன்றியை தெரிவித்துக் கொள்வோம்.

இதனைத் தொடர்ந்து சேலம் ஸ்ரீ பகவத் பவனில் ஜூலை 29ம் தேதி ஸ்ரீ பகவத் பவன் நிறுவனர்கள் மற்றும் புரவலர்களுடன் ஒரு கலந்தாய்வு கூட்டம் நடைபெற்றது. இதில் செப்டம்பர் 2ம் தேதி நடைபெறும் ஞான முகாம் பற்றியும் இதன் பிறகு நாம் செயலாற்ற வேண்டிய திட்டங்கள் பற்றியும் நிர்வாகம் குறித்தும் ஐயாவின் முன்னிலையில் கலந்தாய்வு செய்யப்பட்டது.

மேலும் பகவத் ஐயா வழங்கும் ஞானத்தை அனைவருக்கும் எடுத்துச் செல்ல வேண்டும் என்ற உயர்ந்த நோக்கில் செப்டம்பர் 2ம் தேதி காமராஜர் அரங்கில் நடைபெறும் ஞான முகாமிற்காக பணியாற்றிக் கொண்டிருக்கும் ஸ்ரீ பகவத் மிஷன் குடும்ப உறுப்பினர்கள் அனைவருக்கும் உளமார்ந்த நன்றியை தெரிவித்துக் கொள்கிறோம்.

இந்த சிறப்பு ஞான முகாமில் தாங்கள் அனைவரும் கலந்து கொள்வதோடு தங்களைச் சார்ந்த நண்பர்களையும் உறவினர்களையும் கலந்து கொள்ளச் செய்ய வேண்டுமென்று அன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

இந்த ஞான முகாம், மெய்ஞானம் என்ற உண்மையை உலகிற்கே உரைத்து துன்பங்களிலிருந்தும் துயரங்களிலிருந்தும் மனித குலத்தை விடுவிக்க இயற்கை எடுத்திருக்கும் மாபெரும் விழாவாகும். நாம் அனைவரும் இயற்கையின் கருவியாக இருந்து செயல்படுவோமாக.

# நிகழ்ச்சி நிழல்கள்



ஜுலை ஞான முகாமில் கலந்து கொண்டவர்களுடன் ஸ்ரீ பகவத் ஐயா




சென்னை காமராஜர் அரங்கம் முன் நமது பிளக்ஸ் பேனர்



ஜுலை ஞான முகாமில்




பகவத் பயணம் நூல்
வெளியீட்டு விழா



பகவத் பயணம் நூல்
வெளியீட்டு விழா



பகவத் பயணம் நூல்
வெளியீட்டு விழா



பகவத் பயணம் நூல் வெளியீட்டு விழா



பகவத் பயணம் நூல்
வெளியீட்டு விழா



## செப்டம்பர் 2ம் தேதி சென்னை காமராஜர் அரங்கில்
# ஒரு நாள் சிறப்பு ஞான முகாம்

ஸ்ரீ பகவத் மிஷன் குடும்ப உறுப்பினர்கள் அனைவருக்கும் வணக்கம். நாம் இதுவரை நடத்திய ஞான முகாம்கள் ஒவ்வொன்றும் அதிக பட்சம் 150 அன்பர்கள் கலந்து கொள்ளும் அளவிற்கு மட்டும் ஏற்பாடு செய்திருந்தோம்.

முதன்முறையாக 1500 அன்பர்கள் கலந்து கொள்ளும் அளவு இடவசதி உள்ள சென்னை தேனாம்பேட்டையில் அமைந்துள்ள காமராஜர் அரங்கில் செப்டம்பர் 2ம் தேதி ஞாயிற்றுக்கிழமை மிகவும் சிறப்பாக நடைபெற ஏற்பாடு செய்துள்ளோம். இதனை ஒரு வருட காலமாக திட்டமிட்டு செயல்பட்டு வருகிறோம்.

இந்த முகாமை சிறப்பாக நடத்த நமக்கு 150 தன்னார்வலர்கள் தேவைபடுகிறார்கள். தன்னார்வலர்கள் தங்குவதற்கும் உணவு அருந்துவதற்கும் மேலும் வேலைகளை ஒருங்கிணைப்பதற்கும் காமராஜர் அரங்கத்திற்கு எதிரில் உள்ள கம்யூனிட்டி ஹால் ஏற்பாடு செய்துள்ளோம். செப்டம்பர் மாதம் ஒன்றாம் தேதி சனிக்கிழமை காலை உணவு முதல் மதியம், இரவு, ஞாயிறு காலை உணவு வரை தன்னார்வலர்களுக்கு ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. மேலும் காமராஜர் அரங்கில் முன்னேற்பாடு செய்வதற்காக சனிக்கிழமை செப்டம்பர் ஒன்றாம் தேதி இரவு 11 மணி முதல் காலை 6 மணிவரை ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. ஞான முகாம் ஞாயிறு காலை **9.30** மணிக்கு தொடங்க உள்ளது.

வருகின்ற அன்பர்கள் ஒவ்வொருவருக்கும் ஒரு துணிப்பையில் ஒரு நோட், ஒரு பேனா, குடிநீர் பாட்டில், ஐயாவின் இரண்டு நூல்கள், ஐயாவின் புத்தக விபரம் கொடுக்கிறோம். நாம் இந்த முகாமிற்கு 6 புத்தக ஸ்டால் அமைக்கப்பட உள்ளோம். காலை 11 மணியளவில் தேநீர் இடைவேளை வைக்கப்பட்டுள்ளது. மதிய உணவிற்கு **7 Counters** அமைக்கப்பட உள்ளது. மேலும் இந்த ஞான முகாமில் ஐயா எழுதிய உடலைப் பற்றிய புதிய நூலான ***யோக சிகிச்சை*** என்ற புதிய நூலை அறிமுகம் செய்ய இருக்கிறோம்.

மேலும் ஆயிரம் கார் நிறுத்தம் அளவிற்கு பார்க்கிங் ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. ஞான முகாமில் **ஸ்ரீ பகவத் ஐயா** அவர்களை அறிமுகப்படுத்த மதுரை **ஜி எஸ் மணி ஐயர்** அவர்ளையும் மாலையில் உடல்நலம் பற்றி உரையாற்ற **ஹீலர் பாஸ்கர்** அவர்களையும் **அக்கு ஹீலர் அ.உமர்பாருக்** அவர்களையும் உலக நலம் பற்றி உரையாற்ற மதுரை **ஏசி காமராஜ்** (நவீன நீர்வழிச் சாலை திட்டம் - தலைவர்)அவர்களையும் அழைத்துள்ளோம்.

இந்த ஞான முகாம் பற்றிய விளம்பரத்தை பொதுமக்களுக்கு அறிவிப்பு செய்வதற்கு நாம் இதுவரை பல வழிகளிலும் முயன்று வருகிறோம். போஸ்டர், பிளக்ஸ், பஸ் பின்புறம் விளம்பரம் மற்றும் **Whatsapp, Facebook, Youtube** போன்ற பல வழிகளிலும் அறிவித்து வருகிறோம். இதனை சிறப்பாக நடத்த நமக்கு 150 தன்னார்வலர்கள் தேவை படுகிறார்கள். இதுவரை 75 அன்பர்கள் தன்னார்வலராக இணைந்துள்ளார்கள். எனவேஆர்வமுள்ளவர்கள் நம்மோடு தொடர்பு கொண்டு தன்னார்வலர்களாக இணைந்து கொள்ளும்படி அன்புடன் கேட்டுக்கொள்கிறோம்.

வெளியூரிலிருந்து வரும் அன்பர்கள் தங்குவதற்காக காமராஜர் அரங்கம் அருகில் உள்ள ஹோட்டலில் அறைகள் **(Rooms)** குறிப்பிட்ட அளவு முன் பதிவு செய்துள்ளோம். தேவைப்படுவோர் எங்களோடு தொடர்பு கொண்டு தங்களுக்கு தேவையான தங்கும் அறை விபரத்தை ஆகஸ்ட் 15ம் தேதிக்குள் தெரிவிக்கும்படி கேட்டுக்கொள்கிறோம்.

**செலவுகளை எதிர்கொள்ள இதுவரை நன்கொடை வழங்கியவர்கள் :**

திருமதி **மங்களகௌரி**, ஹைதராபாத்,
திரு. **ராம்லால்**, சென்னை.
திரு. **சம்பந்தம் அய்யா & வழவு அம்மாள்**, மற்றும் குடும்பத்தினர் உணவுக்காக ஆகும் மொத்த செலவுகளையும் ஏற்கிறார்கள்.
திரு. **TMK தியாகராஜன்**, சென்னை
திரு. **சபாபதி**, சென்னை.
திரு./திருமதி **சிவகுரு – உமா சிவகுரு**, தம்பதியினர் சென்னை
திருமதி **பொற்செல்வி**, சென்னை.
திரு. **S. கணேஷ்**, சென்னை
திரு. **நாகராஜன்**, மேற்கு மாம்பலம், சென்னை
திரு./திருமதி **சுகுமார் ஸ்ரீனிவாசன் – லில்லி**, தம்பதியினர்
திருமதி **பிரபா முரளி**, சென்னை
திரு. **ஜெகதீசன்**, சென்னை
திருமதி டாக்டர் **சாந்தி** USA
திரு. **பெருமாள் சாமி**, சென்னை
திருமதி **தீபா**, ராஜபாளையம்
திரு./திருமதி **நாராயணசாமி – செந்தமிழ் செல்வி**, தம்பதியினர்
திரு. **ஆனந்த்**, சென்னை
திரு. **சுரேந்திரன்**, சென்னை
திருமதி **நிருபமா**, சென்னை
திரு. **முத்துசெல்வன்**, நாகப்பட்டினம்
திரு. **முத்துகுமார்**, அஃகு பஞ்சர் மையம், மேற்கு மாம்பலம், சென்னை
திரு. **செந்தில் மனோகரன்**, SBI Life, சேலம்
திரு. **சசிகுமார்**, கோவை
திரு. **D. தனசேகரன்**, ஆரணி
திரு.**G. வெங்கடேஷன்**, (IOC), சென்னை
திருமதி **மேனகா**, ஈரோடு
திருமதி. **Dr. விஜயலட்சுமி**, சென்னை
திரு. **V. மாரிமுத்து**, சென்னை
திருமதி **அஃகு ஹீலர் ஸ்ரீபிரியா**, சென்னை
திரு. **K. கார்த்திக்**, நாமக்கல்
திரு. **பிரபு**, சென்னை

திரு. **M. கணேஷ்குமார்**, கோவில்பட்டி
திரு. **இராஜேஷ்**, மெல்போர்ன்
திருமதி **ரமா சேகர்**, பெங்களூர்
திரு. **சேகர்**, கத்தார்
திரு. **E. மணிகண்டன்**, திண்டுக்கல்
திருமதி **உத்ரா அவினாஷ்**, சென்னை
திரு. **T. சிவகுரு**, கரூர்
திரு. **இராஜகோபால்**, பரமத்திவேலூர்
திரு. **P. தீபக்**, சென்னை
திரு. **சங்கரநாராயணன்**, கும்பகோணம்
திரு. **இரவி**, ஆந்திரா
திரு. **R. சரவணன்**, புரசைவாக்கம், சென்னை
திரு. ஹீலர் **P. டார்வின்ராஜ்**, சென்னை
திருமதி **நிருபமா**, சென்னை
திரு. **ஆனந்த்**, சென்னை
திரு. **சுரேந்திரன்**, சென்னை

நன்கொடை வழங்கிய அனைத்து அன்பு உள்ளங்களுக்கும் அனைவரின் சார்பாகவும் மனமார்ந்த நன்றியை தெரிவித்துக் கொள்கிறோம்.

## நிகழ்ச்சி நிரல்

| | | |
|---|---|---|
| 9.45 am to 10.15 am | - | அறிமுக உரை மதுரை G.S. **மணி ஐயர்** |
| 10.15 am to 11.15 am | - | ஞான புரிதல், அகம் புறம் - **ஸ்ரீ பகவத் ஐயா** |
| 11.15 am to 11.35 am | - | தேநீர் இடைவேளை |
| 11.35 am to 1.00 pm | - | சிந்தனையும் சிந்திப்பும், கர்மவினைகளிலிருந்து விடுபடுவது எவ்வாறு? கேள்வி-பதில் - **ஸ்ரீ பகவத் ஐயா** |
| 1.00 pm to 2.15 pm | - | மதிய உணவு |
| 2.15 pm to 3.00 pm | - | உடல் நலம் **ஹீலர் பாஸ்கர்** |
| 3.15 pm to 4.00 pm | - | உலக நலம் திரு. Er. A.C. **காமராஜ்** நவீன நீர்வழி சாலை திட்டம் - தலைவர் |
| 4.00 pm to 4.45 pm | - | உடல் நலம் **அக்கு ஹீலர் அ. உமர் பாரூக்** |
| 4.45 pm to 5.15 pm | - | ஞானத்தை உறுதிப்படுத்துதல் **ஸ்ரீ பகவத் ஐயா** |
| 5.15 pm to 5.30 pm | - | நன்றி உரை |

# ஜென் கதை
## "மூச்சு விடாதே"

ஒரு குடும்பஸ்தன் இருந்தான். அவனை பாதித்த பழைய பிரச்சனையை நினைத்து நினைத்து வருந்தினான். அவனுக்கு பாதிப்பை ஏற்படுத்திய பழைய பிரச்சனையில் இருந்து விடுபட முடியாமல் மிகவும் தடுமாறினான்.

இதனால் மனம் எப்போதும் வேதனையிலும் கவலையிலும் இருந்தது. அவனை அடிக்கடி பாதிக்கும் இந்த தேவையற்ற சிந்தனையில் இருந்து விடுபட வேண்டும் என நினைத்தான். ஆனால் முடியவில்லை. சதா தேவையற்ற சிந்தனையும் எதிர்மறை எண்ணங்களுமே அவனுக்கு தோன்றிக் கொண்டிருந்தது. இதிலிருந்து எப்படி வெளிவருவது என்று தெரியாமல் தடுமாறிக் கொண்டிருந்தான்.

பல ஆன்மிக குருமார்களை சந்தித்தான். அவர்கள் "நமது அனைத்து துன்பத்திற்கும் காரணம் மனம்தான். மனதை தூய்மையாக வைத்திருந்தால் துன்பமில்லை" என்று கூறி அதற்கான தியானப் பயிற்சி முயற்சிகளை கொடுத்தார்கள். அவனும் நெடுநாட்களாக அந்த பயிற்சிகளை முயன்று பார்த்து வந்தான். ஆனால் தேவையற்ற எண்ணங்களும் எதிர்மறை உணர்வுகளும் வருவது நிற்கவில்லை. மனதை சரி பண்ணுவதற்கான வழி தெரியாமல் தடுமாறினான்.

இச்சந்தர்ப்பத்தில் யாரோ ஒருவர், ஒரு ஞானி இருப்பதாகவும் அவர் மன பிரச்சனைக்கு மருந்து கொடுப்பதாகவும் கேள்விப்பட்டான். குடும்பஸ்தன் அந்த ஞானியை சந்தித்து தன் பிரச்சினையை எடுத்துக் கூறி, "இதற்கு நீங்கள்தான் எப்படியாவது சரியான மருந்து கொடுத்து என்னை காப்பாற்ற வேண்டும்" என்று கெஞ்சிக் கேட்டுக் கொண்டான்.

ஞானியும் "இது மிகவும் சாதாரண விஷயம்.

இதற்கு ஒரு வேளை மருந்து சாப்பிட்டாலே போதும்," என்று கூறிவிட்டு ஒரு பாட்டிலை கொடுத்தார்.

குடும்பஸ்தனும் மருந்தை வாங்கிக் கொண்டு "சுவாமி இதை நான் எப்படி சாப்பிட வேண்டும்?" என்று கேட்டான்.

ஞானி, "இதை நாளை காலை உணவுக்கு முன் ஒருவேளை குடி" என்றார். மேலும் மருந்தைக் கொடுத்து ஞானி ஒரு நிபந்தனையையும் கூறினார் அதாவது "மருந்து சாப்பிடும்போது ஒரே ஒரு வேலையை மட்டும் நீ செய்யக் கூடாது! அந்த வேலையை செய்தாய் என்றால், அந்த மருந்து வேலை செய்யாது" என்றார்.

"என்ன வேலை சாமி? அதையும் சொல்லி விடுங்கள்" என்றான். "மருந்தை குடிப்பதற்காக மூடியைத் திறந்து 2 ஸ்பூன் அளவிற்கு மருந்து எடுத்து குடித்து விட்டு பிறகு ஒரு டம்ளர் தண்ணீர் குடித்து விட்டு பாட்டில் மூடி மூடும் வரை நீ ஒரு வேலையை மட்டும் செய்யக் கூடாது. வேறு எது வேண்டுமானாலும் செய்யலாம்" என்று கூறினார் என்றார் ஞானி.

குடும்பஸ்தன் "சுவாமி நான் எந்த வேலையைச் செய்யக்கூடாது? அதைச் சொல்லுங்கள்" என்றான். "மருந்து பாட்டிலின் மூடியை திறந்து மருந்தை குடித்து விட்டு மூடியை மூடும் வரை மட்டும் நீ உன்னுடைய மூச்சை உள்ளே இழுக்கக்கூடாது, வெளியே விடக்கூடாது. இது தவிர வேறு எந்த வேலையை வேண்டுமானாலும் செய்யலாம். மூடியைத் திறக்கலாம். இரண்டு ஸ்பூன் மருந்து குடிக்கலாம். உடனே தண்ணீர் குடிக்கலாம். பிறகு மீண்டும் மருந்து பாட்டில் மூடியை மூடி விடலாம். ஆனால் இது செய்யும் வரை நீ மூச்சை உள்ளே இழுக்கவோ வெளியே விடவோ கூடாது. இந்த ஒரு வேலையை மட்டும் செய்யக்கூடாது" என்றார் ஞானி. "சரி சுவாமி" என்று கூறி விட்டு மருந்துடன் வீட்டுக்குச் சென்றான் குடும்பஸ்தன். அடுத்த நாள் காலை எழுந்து குளித்துவிட்டு மருந்து சாப்பிட தயாரானான். ஞானி கூறிய நிபந்தனையில் கவனமாக இருக்க வேண்டும் என்ற நினைத்து மருந்து பாட்டிலை எடுத்தான். மூடியைத் திறந்து மருந்தை ஊற்றி குடிக்க முயற்சி செய்தான். முடியவில்லை, மூச்சை உள்ளே இழுக்காமலும் வெளியே விடாமலும் மருந்தை வாயில் ஊற்றிப் பார்த்தான். விக்கி கொண்டது. மருந்து உள்ளே செல்லவேல்லை. கடும் பாடுபட்டான். முடியவில்லை. வேறு வழி தெரியாமல் மீண்டும் ஞானியை சந்திக்கச் சென்றான்.

"சாமி மூச்சை அடக்கிக் கொண்டு மருந்து குடிப்பது மிகவும் சிரமமாக இருக்கிறது. நானும் எப்படியெல்லாமோ முயற்சி செய்து பார்த்து விட்டேன். என்னால் முடியவில்லை சாமி. இதற்கு வேறு ஏதாவது யோசனை இருந்தால் கூறுங்கள்" என்றான்.

ஞானி, "இது மிகவும் எளிது ஆயிற்றே. மருந்து குடிக்கும் போது எதற்காக நீ மூச்சை இழுத்துக் கொண்டும் விட்ட கொண்டும் இருக்கிறாய். அந்த வேலையை விட்டுவிட்டு நீ ஒரு மூடி மருந்து மட்டும் குடிக்க வேண்டியது தானே" என்றார். குடும்பஸ்தன், "சாமி அப்படி என்றால் சுவாசம் தானாக நடந்தால் தவறில்லையா? மருந்து சாப்பிடலாமா? அப்படி என்றால் நானாக மூச்சை இழுத்து விட கூடாது என்பதுதான் நிபந்தனையா? என்று கேட்டான்.

"நீயாக மூச்சை இழுப்பதும் விடுவதும் மட்டும்தான் மருந்து எடுக்கும் போது செய்ய வேண்டாம் என்று கூறினேன். மற்றபடி சுவாசம் இயற்கையாக தாமாக நடந்தால், அதில் எந்த தவறும் இல்லை. இயற்கையான சுவாசத்தை நம்மால் ஒருபோதும் அடக்கவோ நிறுத்தவோ முடியாது. ஏனெனில் அது இயற்கையின் இயக்கம். இதுபோல்தான் மனமும்" என்றார் ஞானி.

குடும்பஸ்தனுக்கு மண்டையில் ஏதோ சுரீர் என்று உரைத்தது. முதன்முதலாக இயற்கையான சுவாச இயக்கத்தையும் நாமாக செய்யும் சுவாச இயக்கத்தையும் என்ன என்பதை வேறுபடுத்தி புரிந்து கொண்டான். உடனே குடும்பஸ்தன் ஞானியின் முன்னிலையிலேயே மருந்து பாட்டிலில் இருந்து மருந்தை எடுத்து எந்த சுவாச முயற்சியுமின்றி உட்கொண்டான்.

"இன்று மருந்து எடுத்திருக்கிறாய். இன்று முழுவதும் ஓய்வெடுத்துக் கொள். நாளை எல்லாம் சரியாகி விடும்" என்றார் ஞானி.

குடும்பஸ்தனுக்கு தன்னுடைய பழைய மனபாதிப்பை எப்படி கையாள வேண்டும் என்ற நுட்பம் புரிந்தது. மன பாதிப்பு பற்றிய சிந்தனை தாமாக வருவது - அது இயற்கை. அது இயற்கையாக சுவாசம் நடப்பதைப் போன்றது. தாமாக வந்த மன பாதிப்பை பற்றிய சிந்தனையை நாமாக முயற்சி செய்து சிந்திப்பது என்பது நாமாக மூச்சை இழுத்து விடுவது போன்றது என்பதை தெளிவாக புரிந்து கொண்டான்.

**சிந்தனைக்கும் சிந்திப்புக்கும் உள்ள வேறுபாட்டை நன்கு புரிந்து கொண்டான். பலகாலம் பாதித்திருந்த பாதிப்பிலிருந்து விடுபட்டான் குடும்பஸ்தன்.**

Registration Number of the Registered News Paper TNTAM/2014/57698
Postel Registration Number : TN/WR/SL(E)/22/2018-2020 Posted at Salem HOP 636001. On 10th of every month.

Published by Shri. V.A.P. Sharavanan on behalf of the Sri Bagavath Mission, 31, Ramalingasamy Street, Ammapet, Salem-636 003. Tamilnadu. India.
Printed by Shri. R. Jayavel at Sree Jayavel Press, 08/11, Gandhi Maidanam, Ammapettai, Salem-636 003. Editor : Shri. K.S. Jeevamani Cell : 97891 65555